புகழ்புரிந்த இல்லிலோர்க் கில்லை இகழ்வார்முன்
ஏறுபோல் பீடு நடை.

☆

[ கணவனது புகழை விரும்பாத பெண்ணை அடையாத ஆடவர் உலகிலே தலைநிமிர்ந்து நடக்க முடியாதென்றார் ]

— ☆ —

அரிதரோ தேற்றம் அறிவுடையார் கண்ணும்
பிரிவு ஓர் இடத்துண்மை யான்

☆

நாரணன் வினையாட் டெல்லாம் நாதமென வியந்து
நாரணக் கவிதை செய்தான் அறிந்த வான்மீகி என்பான்
சீரணி சோழ நாட்டுத் திருவழுந்தூரில் வாழ்வோன்
காரணக் கொடையான் கம்பன் தமிழினாற் கவி செய்தானே.

☆

இல்லோர் இரப்பதும் இயல்பே, இயல்பே;
இரந்தோர்க்(கு) ஈவதும் உடையோர் கடனே.

☆

உண்ணான் ஒளிநிறான் ஓங்கு புகழ் செய்யான்
துன்னருங் கேளிர் துயர்களையான் — கொன்னே
வழங்கான் பொருள்காத் திருப்பானேல் அஆ!
இழந்தானென் றெண்ணப் படும் (நாலடியார்)

☆

இன்னல் தரும் பொருளை ஈட்டுதலும் துன்பமே;
பின் அதனைப் பேணுதலும் துன்பமே — அன்னது
அழிந்ததும் துன்பமே; அந்தோ! பாழ்பால்
கழித்ததும் துன்பமே யாம்.

☆

சிறப்பீனும்; செல்வமும் ஈனும்; அறத்தினூஉங்
காக்கம் எவனோ உயிர்க்கு.

☆

பொறாதார் தாக்கும் பொழுதுயாம் நாவின்றே
உரமொடு காக்க வாழ்வோர்

☆

அஞ்சாமை ஈகை அறி(வு) ஊக்கம் இந்நான்கும்
எஞ்சாமை வேந்தற்(கு) இயல்பு

☆

இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்நாண
நன்னயம் செய்து விடல்.

☆

காவலுடையார் தம்மைக் காப்பர்; காவலார்
காவலால் நெஞ்சத் தவர்.

☆

முறை செய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
இறை யென்று வைக்கப் படும்

☆

அன்றறிவாம் என்னா(து) அறம் செய்க; மற்றது
பொன்றுங்கால் பொன்றாத் துணை.

☆

அழுக்காறு உடையார்க்கு அதுசாலும்; ஒன்னார்
வழுக்கியும் கேடீன் பது

☆

தாந்தமையும் தீயனவே செய்திடினும் தாமவரை
ஆந்தனையும் காப்பர் அறிவுடையோர்

☆

ஒழுக்காறாக் கொள்க ஒருவன் தன் நெஞ்சத்து
அழுக்கா றிலாத இயல்பு

☆

தன்னெஞ்(சு) அறிவது பொய்யற்க; பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச் சுடும்

☆

ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு.

☆

பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்
நயனுடை யான்கட் படின்

☆

அங்கமெலாங் குறைந்தழுகு தொழுநோயராய்
ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்பராகில்
அவர் கண்டீர் நாம் வணங்குங் கடவுளாரே

☆

மண்புகழ் பெருமை நீங்கள் மாபுகழோர் புகழ்கள் எல்லாம்
உன்புகழ் ஆக்கிக் கொண்டாய்

☆

வேதியர் தமைத் தொழும் வேந்தனைத் தொழும்
தாதியர் தமைத் தொழும் தான் தன்னைத் தொழும்
ஏதுமொன் றுணர்கிலா திருக்கும் ஆற்றலால்
காதலைப் பெறுவதோர் கள்ளன் தோற்றமே

☆

பெறுமவற்றுள் யாமறிவதில்லை அறிவறிந்த
மக்கட் பேறல்ல பிற.

☆

பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்ப தறிவு.

☆

அன்றறிவோமென்னா தறஞ் செய்க மற்றது
பொன்றுங்கால் பொன்றாத் துணை

☆

இன்மையுள் இன்மை விருந்தொரால் வன்மையுள்
வன்மை மடவார்ப் பொறை

☆